# அறைவாசிகள்

**க**தவு தட்டல் சத்தம் கேட்டு விளக்கைப் போட்டான் சதாசிவன். கண்ணைக் கூசியது மின்னொளி. மணி நாலே முக்கால் ஆகியிருந்தது. கதவின் கொண்டியை நீக்கியதும் உள்ளே பாய்ந்த டிசம்பர் மாதக் குளிரில் உடல் சிலிர்த்தது. எழவா இழுத்துப் போர்த்தவா என்று செல்லையா யோசிக்கையில், சதாசிவத்தின் வினா கேட்டது.

தரை வெளுக்குமுன் யார் தேடி வருவார்கள்? அடுத்த வீட்டுக் காரர்கள் யாருக்கேனும் அவசரத் தேவை ஏதாவது இருக்கும். ஆனால் அடுத்த வீட்டுக்காரர்கள் இல்லை.

''யார் வேணும்?''

கரகரத்த குரலின் பதில் தெளிவாகக் கேட்கவில்லை.

''ஆமாம். நமஸ் இஞ்சதான் தாமசிக்கான்... நீங்க ஆரு?''

''... ... ...''

''ஓ... உள்ள வாரும். அதாரு? நமஸ் ஆத்துக்காரியா? நமஸ்காரம்... வாங்கோ...''

சதாசிவன் கதவின் மற்றொரு கொண்டியை நீக்கியதும் வயதான ஒருவரும் அவர் பின்னால் குளிர்தாங்கப் போர்த்துக்கொண்டு ஒரு பெண்ணும் உள்ளே நுழைந்தனர். வயசாளி டிரங்குப் பெட்டியை சுவரோரம் வைத்து அதன் பக்கம் படுக்கைச் சுருணையை வைத்ததும் பெண் கையில் இருந்த ஏர்-பேக்கை கீழே இறக்கினாள்.

கனத்த சோலாப்பூர் கைத்தறிப் போர்வைக்குள் கைவிட்டு, நெகிழ்ந் திருந்த சாரத்தை இறுக்கிக் கட்டிவிட்டு, படுத்த நிலையில் இருந்து சுவரில் சாய்த்த பிணத்தின் நிலைக்கு வந்தான், செல்லையா.

''செல்லையா, நமஸைத் தட்டி எழுப்பும் ஓய்... நன்னாக் கொறட்டை விட்டுத் தூங்கறான்... சவம்'' என்றவன் நாக்கைக் கடித்துக் கொண்டான்.

நமச்சிவாயம் என்ற நமஸ் லேசாகத் தட்டினால் அசைகிற ஜாதி இல்லை. இரவுக்காட்சி பார்த்துவிட்டு வந்து படுத்திருந்தான். வழக்க மாய் கடைசியில் எழுந்து அவசரமில்லாமல் கக்கூஸ் போய், குளித்து,

நாஸ்டாவுக்கு இறங்குகிறவன்.

கிச்சனில் மடக்கி வைத்திருந்த ஒரேயொரு நாற்காலியைக் கொண்டு வந்து போட்டான் சதாசிவம். காலால் தனது படுக்கை விரிப்பை எற்றிச் சுருட்டினான். பெரியவர் நாற்காலியில் உட்கார்ந்தார். டிரங்குப் பெட்டியின் பக்கம் ஒடுங்கி உட்கார்ந்தாள் நமஸ் வீட்டுக்காரி.

நமச்சிவாயம் லேசாக அசைந்தான்.

''டேய் எழுந்திரடா... ஆரு வந்திருக்கா பாரு!''

''சை... மனுஷனை உறங்க விடாம ராவிலே என்ன சல்லியம்?'' என்று அசைந்த நமசின் போர்வையைப் பிடித்து சதாசிவன் இழுக்க, வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்து உட்கார்ந்து பரக்கப் பரக்கப் பார்த்தான்.

முதலில் ஒன்றும் விளங்கவில்லை. புத்திக்கு தகவல்கள் சென்று தாக்கியதும் தனது அசம்பாவித நிலையை எண்ணிக் கலவரமடைந்தவாறே, ''மாமாவா? எப்போ... எப்போ வந்தேள்?'' என்றான். மனைவியைப் பார்த்துச் சிரித்தான்.

வெளி வராந்தாவில் போய் சற்று நேரம் நின்ற சதாசிவன் குளிரினால் தோள்களை உதறிக்கொண்டு உள்ளே வந்தான்.

''ஒய், செல்லையா! மேனோன் சாயாக்கடை திறந்தாச்சு. வேகம் பல்லு தேச்சுட்டு வாரும்...''

''கக்கூஸ் இருக்கோல்லியோ!'' என்று கேட்ட நமச்சிவாயத்தின் மாமனாரிடம் அதைக் காட்டிவிட்டு, ஷெல்ஃபில் இருந்த தனது டூத் பிரஷ்ஷைத் தேடினான். சாதாரணமாய் சதாசிவன் தனது பிரஷ்ஷை மெனக்கெட்டுத் தேடி எடுத்துப் பல் தேய்க்கும் வழக்கம் கொண்டவன் இல்லை. கையை விட்டுத்துழாவுகையில் முதலில் தட்டுப்படும் பிரஷ்ஷினால் அன்று பல் தேய்ப்பான். ஆரம்பத்தில் சத்தமும் சண்டையும் போட்டு அலுத்துப் போயிற்று எல்லோருக்கும். அவனைத் திருத்த முடியாது என்று விட்டுவிட்டார்கள். தாமோதரன் மட்டும் தனது பிரஷ்ஷை தினமும் சூட்கேசினுள் வைத்துக்கொள்வான். அத்துடன் ஷேவிங் கிரீம், சோப், எண்ணெய், முகப்பவுடர் முதலிய சகலவற்றையும்.

பல் தேய்த்து ஒரு சாய் உள்ளே செலுத்தி தம் ஊதினால்தான் சதாவுக்கு சன்டாஸ் வரும். கிச்சன் சிங்க்கில் செல்லையாவும் பல் தேய்த்து வந்தான். செம்பு ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு இறங்கும்போது நமஸ் மனைவியைப் பார்த்துச் சொன்னான் - ''பல் தேச்சிருங்கோ சாயா வேண்டீட்டு வாறோம்.''

மூன்றாண்டுகளுக்கு முன்னால் இந்த ஒன்-ரூம்-கிச்சனுக்கு குடி வந்தது முதல் மேனோன் பழக்கம். எனவே நல்ல டிகாக்ஷனில் நுரை பொங்க சாயா அடித்துத் தருவார். காசு இல்லாவிட்டால் மாதக்கடைசி

ஞாயிறுகளில் கடனுக்கும் இரண்டு பட்டாட்டா வடை தின்று சாயா குடித்துக் கொள்ளலாம்.

கோலிவாடா ஸ்டேஷனை ஒட்டிக் கிழக்குப்புறமாக அமைந்த ஹவுசிங் போர்டு காலனி அது. எல்லாம் வரிவரியாக நான்கு மாடிக் கட்டிடங்கள். எல்லா வீட்டுக்கும் பொதுவாக நீளமானதோர் முன் வராந்தா. பத்துக்கு பன்னிரண்டு அடியில் முதல் அறை. அதைத் தொட்டு பத்துக்கு எட்டில் கிச்சன். கிச்சன் மூலையில் மோரி என்ற சிங்க் என்ற வாஷ்பேஸின் என்ற பாத்திரம் கழுவும், கை கழுவும், முகம் கழுவும் இடம். சிறியதோர் சமையல் மேடை. கிச்சனில் இருந்து நாலுக்கு நாலில் பாத்ரூம். பாத்ரூமில் இருந்து நாலுக்கு நாலில் கக்கூஸ் அல்லது சன்டாஸ். காலையில் ஒருவன் மோரியில் பல்தேய்க்க ஒருவன் கக்கூஸ் போய் அங்கேயே குளிப்பான். ஒருவன் பாத்ரூமில் குளிப்பான். பாத்ரூமில் குளிப்பவன் வெளியே வந்ததும் கக்கூஸில் குளிப்பவன் வெளியே வருவான். அகில இந்திய ரயில்வே கால அட்டவணை போல ஒன்றுக் கொன்று மோதலும் முரணலும் இல்லாத வரையறுக்கப்பட்ட ஏற்பாடு. சாதசிவன் சமயத்தில் உள்ளே புகுந்து நேரங்களைக் குழப்படி செய்து விடுவான்.

மாடசாமி அந்த வீட்டை எப்படிப் பிடித்தார் என்று தெரியவில்லை. ஆனால் மனிதருக்கு குடும்பத்தோடு வாழக் கொடுத்து வைத்திருக்க வில்லை.மனைவியும் இரண்டு பெண்பிள்ளைகளும் சொந்த ஊரில் வீமநகரியில் இருந்தனர். முக்கால் கோட்டை விதைப்பாடும் ஓடு போட்ட வீடும் அறுத்தடிப்புக் களமும் உண்டு. அறுத்தடிப்புக் களத்தின் மூலைகளில் மூத்துப் போன மூன்று தென்னை மரங்கள். பப்பாளிப் பழ அளவில் இரண்டு மாதத்துக்கு ஒரு முறை தலைக்கு மூன்று காய்க்கும். தொலித்துப் போட்டால் கொய்யாப்பழ அளவில், தேங்காய் முறிக்குள் திருவலைக்குத்தி நுழையாது. இது தவிர பூவரசு, வேம்பு. பம்பாயில் குடும்பத்துடன் இருந்துவிட்டால் இந்த முதல் எல்லாம் ஊரான் தின்று அழித்துவிடுவான் என்ற அச்சம் இருந்திருக்க வேண்டும். பெண்பிள்ளை கள் இருவரும் வெள்ளமடத்தில் உயர்நிலைப் பள்ளியில் படித்தனர். மாடசாமி, ஆறு மாதத்துக்கு ஒருமுறை விடுப்பில் ஊர் போய் வருவார். பெரும்பாலும் வயல் அறுவடை சமயம் பார்த்து. முதல் முறை உரிமை விடுப்பு. இரண்டாம் முறை மருத்துவ விடுப்பு.

ஆளைப் பார்த்தால் நோயாளி என்று மருத்துவச் சான்றிதழ் இல்லாமலேயே யாரும் உறுதியாகச் சொல்வார்கள். ஒரு தினுசில் அடிக்கடி தொண்டையைச் செருமிக்கொள்வார். மூன்று நிமிடத்துக்கு ஒரு முறை என்ற அட்டவணைப்படி செருமிச் செருமி காறித்துப்புவார். அநேகமாய் பம்பாய் சால்களிலும் ஹவுசிங் போர்டு வீடுகளிலும் வாழ்பவருக்கு இந்தத் துப்பல் நோய் இருந்தது. கல்லிகளில் நடக்கும் போது நடுப்பகுதியில் நடக்காவிட்டால் சட்டை பூரா தெளிப்பு

இருக்கும். தம்பாக்கூ கரித்துப்பல், பான் துப்பல்,வெறுந்துப்பல் என. இரவில் உறங்கும்போது இந்தச் செருமலும் துப்பலும் இல்லை என்று தோன்றுகிறது. கரியமில வாயு, கார்பன் மோனாக்சைட், தூசி, பஞ்சுத் துகள், ஊர்திகள் கக்கும் துத்தநாகப்புகை எனப் பலவும் காரணமாக இருக்கலாம்.

மாடசாமி இல்லாதபோது வீட்டின் பொறுப்பு, தார்மீகமாக செல்லையாவுக்குத்தான். அவனும் எல்லோரையும் போலத்தான் வாடகை கொடுத்தான் என்றாலும், மாடசாமிக்கும் செல்லையாவுக்கும் ஒரு பந்தம் இருந்தது. மாடசாமிக்கு வீமநகரி என்றால் செல்லையாவுக்கு பொதேரி. இரண்டு ஊருக்கும் காகம் பறக்கும் தூரத்தில் ஒரு மைல் இருக்கும். ஆனால் சாலைவழியாகப் போனால் இரண்டரை மைல் சுற்று. இரண்டு ஊரையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு மட்டுமல்லாமல், இரண்டு ஊருக்கும் தனித்தனியாகவும் பஸ் போக்குவரத்து கிடையாது. சைக்கிள் அல்லது வில்வண்டி அல்லது சக்கடா வண்டியில் போகலாம். வீமநகரிக்காரர்கள் பொடி நடையாக நாற்கால்மடம் விலக்குக்கு பஸ் ஏறப்போனால் பொதேரிக்காரர்கள் ஓட்டமும் நடையுமாய் ஓட்டுக் கம்பெனி விலக்குக்கு பஸ் ஏற வருவார்கள். ஒட்டாபீஸ் சேரும் நேரத்தில் ஒழுகின சேரிப்பாலம் தாண்டி டவுனுக்குள் நுழைந்தும் விடலாம்.

ரேடியோப் பெட்டிகள் மரத்தினால் ஆன காபினட் பொருத்திக் கொண்டிருந்த காலத்தில், தொழிற்சாலையின் தச்சுக்கூடத்தில் மாட சாமிக்கு வேலை கிடைத்தது. தச்சுக்கூடம் மூடப்பட்டபிறகு பேக்கிங் செக்‌ஷனுக்கு மாற்றினார்கள். எதுவானால் என்ன? ஆணி அடித்து இறுக்குதல் அன்றாட வாழ்க்கை. இருபத்தெட்டு வருட சர்வீசும் ஆகி விட்டது. குடும்பத்தை பம்பாயில் வைத்துப் பராமரிப்பதை விட ஊரில் வைத்துப் பராமரித்தால் செலவு குறைவு என்பது மாடசாமியின் கணக்கு. கணக்கும் தப்பு என்ற சொல்லிவிடமுடியாது. வாடகைப் பணத்தில் செலவு நடத்திக்கொண்டு சம்பளப் பணத்தை சீட்டுக் கட்டினார். ஊரில் ஒன்றரைக் கோட்டை விதைப்பாடு வாங்கியாகி விட்டது. வீட்டை மட்டுப்பா போட்டுக் கட்டியாயிற்று. முதல் பெண்ணுக்கு பொன் உருப்படி தயார்.

செல்லையா, பம்பாய்க்கு வேலை தேடி வந்தபோது மாடசாமியின் முகவரி கையில் இருந்தது. வேலையெல்லாம் அமைந்தபிறகு, ஒரு விடு முறை நாளில், ஒய்வாகப் போய்ப் பார்த்தான்.

''யேய் யாரு? பொதேரி சொள்ளையாண்டி அண்ணனுக்கு மகனா? சின்னப்பிள்ளையிலே பாத்திருக்கேன். ஒங்க ஆத்தா இருக்காளாடே? நல்ல மனுசி. உங்க வீடு கெட்டச்சிலே எங்க அப்பாக்குக்கூட நானும் வேலைக்கு வந்திருக்கேன் பாத்துக்கோ. அந்த மாரி மரமெல்லாம் இப்பம் யாரு வாங்கி வேலை செய்யா?''

அடுத்த முறை ஊருக்குப் போகும்போது, ''வீட்டில் கொண்டுக் கிட்டுப் போயிக் குடுத்திரு என்னா?'' என்ற பலவட்டற சாமான்கள் அடங்கிய அட்டைப் பெட்டியை ஏற்றிவிட்டுவிட்டார். அப்போது பம்பாய்-கன்னியாகுமரி நேரடி ரயில் விட்டிருக்கவில்லை. சென்னை சென்ட்ரலில் இறங்கி, எக்மோருக்கு மாறி, திருநெல்வேலியில் இறங்கி பஸ் பிடித்து நாகர்கோயில் கொண்டு சேர்ப்பதற்குள் பெற்ற வீட்டில் அம்மா நாக்கில் வைத்த சேனை வெளிச்சாடி விட்டது.

வாடகைக்கு வந்து சேர்ந்தபின்பு சலுகைகள் ஏதும் கிடையாது என்றாலும் செல்லையாவை அதிகம் அவர் திட்டுவது இல்லை.

குளிருக்கு சாயாக்கிளாசைக் கையில் பிடித்துக்கொண்டிருப்பதே சுகமாக இருந்தது. மேனோன் இருபத்தி ஏழாவது ஆண்டாக சபரி மலைக்குப் போக மாலை போட்டிருந்தார். இந்தக் குளிரிலும் பச்சை வெள்ளத்தில் குளித்திருந்தார். கறுப்பும் வெள்ளையுமான நரைத்த தாடியும் துளசி மணிமாலையும் சந்தன வரையும் அதிகாலையில் அவருக்கு ஒரு துலக்கத்தை அளித்திருந்தன. அதிகாலையே ஒரு துலக்கம் தான்.

மனிதன் ஒவ்வொருத்தனுக்குள்ளும் ஒரு அழகு ஒளிந்திருக்கிறது. அந்தந்தப் பிராயத்துக்கான பிரத்யேகமான அழகு. சரியான சூழலில் பொருத்திப் பார்க்கும் பொழுது துலங்கும் அழகு.

சதாசிவன் செம்பில் வாங்கிய சாயாவுக்கு காசு கொடுத்து சில்லறை வாங்கிக்கொண்டிருந்தான். இடது கையில் சிகரெட் இருந்தது. பொருத்திக் கொள்ளவில்லை. பொருத்தினால் சன்டாஸ் கதவைத் திறக்க வேண்டும் அவனுக்கு.

எந்த வீடும் திறந்திருக்கவில்லை. மாடிப்படி மூலையில் வழக்க மாய் நித்திரை கொள்ளும் தெருநாய் அல்கா தலைதூக்கிப் பார்த்து அங்கீகார அசைவினைக் காட்டிக்கொண்டு மறுபடியும் முடங்கிக் கொண்டது.

வீட்டினுள் மாமனாரும் மருமகனும் ஒரு விளக்கமான உரை யாடலில் ஈடுபட்டிருந்தனர்.

''அதற்கில்லை மாமா... முன்னைப் பின்னைச் சொல்லாமல் நீங்கள் அவளையும் கூட்டீட்டு வந்துட்டேள். இப்பம் நான் என்ன செய்யட்டும்? ச்சே... மூணு நாள்லே வீடு பார்க்க முடியுமா? அதான்... சமாதானமா இரியுங்கோ... நான் ஏற்பாடு பண்றேன்னு எழுதினேன். உங்களுக்கும் பொறுதி இல்லை. வெப்ராளப் பட்டா நடக்குமா?''

சூழ்நிலை ஏற்கனவே அர்த்தமாகி வந்தது. சதாசிவன் சாயாவை கிளாஸ்களில் ஊற்றி மூன்று பேருக்கும் நீட்டினான். சாயாவை ஒரு உறிஞ்சு உறிஞ்சிக்கொண்டு மாமனார் பேச ஆரம்பித்தார்.

''இல்ல நமஸ்... நீ கோச்சுக்காதே! அவளானா ஒரே கரைச்சலும் பெகளமும். நீ போன வருஷம் சாஸ்தா ப்ரீதிக்கு வந்துட்டுப் போனவன். இன்னா அன்னாண்ணு ஒரு வருஷம் பண்ணிப் போட்டே.... நான் என்ன செய்யறது சொல்லு... மனசு கேக்கல்லே...''

''செரி செரி... இப்பம் சொல்லி என்ன பிரயோஜனம்? உங்களுக்கும் அவளுக்கும் ஒரு சம்சயம். நமஸ் இஞ்ச மராத்திக்காரியை வெச்சுக் கிட்டிருக்கானோண்ணு...''

''யேய்... என்ன பேசறே நீ? உன்னை நேக்குத் தெரியாதா? என்னடா பேசறே நீ?''

''சும்மா தமாசுக்குச் சொன்னேன். போகட்டும். நீங்கள் ஒரு ஆழ்ச்சை இருந்து பம்பாயெல்லாம் சுத்திப் பார்த்துட்டு ஊருக்குப் புறப் பட்டு போங்கோ. நான் ரெண்டு மாசத்திலே எப்படியும் ஒரு ரூமாவது பார்த்துட்டு லெட்டர் போடறேன்...''

நமஸின் அகத்துக்காரி லேசான பனிச்சிணுங்கலில் இருந்தாள். சாயா ஆறிக்கொண்டிருந்தது.

ஒருவிதமான விடுபடாச் சிக்கல். வாங்குகிற சம்பளத்தில் ஒன்-ரூம்-கிச்சன் முழு வீடு வாடகை என்பது நடக்கிற காரியமா என நமஸ் யோசித்திருப்பான். என்றால் கல்யாணம் செய்யாமல் இருந்திருக்க வேண்டும். முப்பத்தி நாலு வயதில் கல்யாண ஆசை என்பது வீபரீதமான காரியமும் அல்ல. அந்த விதத்தில் புத்திமதி சொல்வது உசிதமானதல்ல. எலிப்பொறியில் சிக்கிக்கொண்ட உணர்வுதான் இப்போது அவனுக்கு இருக்க வேண்டும். சதாசிவத்துக்கும் செல்லையாவுக்கும்கூட லேசாக வலிக்க ஆரம்பித்தது.

ஒரு வாரம் தங்கும் விதத்தில் சமைத்துச் சாப்பிடும் தோதில் தளவாட சாமான்கள் கிடையாது. ஓட்டலில் அல்லது மணி அய்யர் மெஸ்ஸில் சாப்பிட வேண்டும். அவ்விதம் சாப்பிட்டு நாள் நகர்த்தும் நிறையத் தம்பதிகள் உண்டு. மலபார் ஹில்ஸ், சௌபாத்தி, மகாலட்சுமி கோயில், கேட் வே ஆஃப் இந்தியா, மரீன் டிரைவ் எல்லாம் சுற்றிக் காட்ட வேண்டும். திருப்பி அனுப்ப இரண்டு டிக்கட்டுகள் சென்னை வழியாகப் பாலக்காட்டுக்கு வாங்க வேண்டும். கற்பகத்துக்கு மட்டுமாவது ஒரு சாரி வாங்கிக் கொடுக்க வேண்டும். சந்துலால் சுராச்சி வாலா அல்வா கிலோ இப்போது என்ன விலை என்று தெரியாது. எல்லாம் கிட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய் பழுத்துவிடும்.

ஓராண்டு சென்று பார்க்கும் மனைவியின் முகத்தை ஆனந்தத்துடன் முகர்ந்து பார்க்க முடியாதபடிக்கு பொறியின் நெருக்கல்...

செல்லையா சமாளிக்கும் விதத்தில் சொன்னான், ''சரி... எல்லாம் ஆலோசிப்போம். அதுக்காச் சுட்டி அவ்வோ வந்த உடனே ஆத்திரப் படாதே நமஸ்.''

மறுபடியும் தூங்க முடியாத பலபலா விடியலின் மெல்லரவங்கள் உயிர்த்துக்கொண்டிருந்தன. உடனடியாகச் செய்வதற்கு ஒன்றும் இல்லை. உறைந்து போனதோர் பாதல் சர்க்கார் நாடகக் காட்சிபோல் எல்லோரும் அமந்திருந்தனர்.

வழக்கமாய் தாமோதரன் இரவு ஷிப்ட் முடிந்து வரும்போது மற்றவர்கள் வேலைக்குப் போய்விட்டிருப்பார்கள். நல்லவேளையாக மாடசாமி ஊருக்குப் போயிருந்தார். வர இன்னும் பத்து நாட்கள் ஆகலாம். அவர் வீட்டில் இருந்தால் பூச்சி முள்ளாகக் கோர்த்திருப்பார்.

''பால்கனியிலே சேர்ந்து நிக்காதீங்கோ.''

''பாத்ரூம் லைட்டை அணையப்பா.''

''சிகரெட் புடிச்சா சாம்பலைக் கிண்ணத்திலே போடணும்.''

''பைப்பை இஷ்டத்துக்கு தொறந்து விட்டிருவான்.''

''கக்கூசுக்குப் போனா சரியா தண்ணி ஊத்துங்கப்பா.''

''தெனசரி ராத்திரி பத்தரை மணிக்கு வந்தா மனுஷன் ஒறங்காண்டாமா?''

- என்ற ரீதியில் தனது இருப்பை புலப்படுத்திக்கொண்டே இருப்பார். போதாக் குறைக்கு ஊறுகாய் போல, ''ம்ஹம் ம்ஹம்'' என்று ஓயாத செருமல் சத்தம் வேறு.

பால்கார பையாக்களின் அலுமினியக் குவளை ஒலி. சொத்தென்று வந்த விழுந்தது, பொதுவில் வாங்கும் டைம்ஸ் ஆஃப் இந்தியா. வீட்டில் சமையல் ஏற்பாடு இல்லை. ஷேவிங் செய்து, பல் தேய்த்துக் குளித்து, உடை மாற்றி, எட்டு மணிக்கு இறங்கி, போகும் வழியிலேயே மேனோன் கடையில் ஏதும் வாங்கித் தின்றுவிட்டு, கோலிவாடா ஸ்டேஷன் போய் குர்லா வண்டி பிடிப்பான் செல்லையா. அவனுக்கு முலண்ட் ஸ்டேஷன் பக்கம் ஒரு தொழிற்சாலையில் வேலை. மத்தியானம் கேன்டீன் சாப்பாடு. இரவுக்கு கிங் சர்கிள் ரயில்வே பாலத்தின் கீழே இருக்கும் கண்ணனூர் காக்கா மெஸ்.

சதாசிவத்திற்கு வி.டி. பக்கம் ஒரு குஜராத்தி கம்பெனியில் பி.ஏ, கிளார்க், டைப்பிஸ்ட், ப்யூன் என நான்கு வேடக் கதாபாத்திரம். ஒன்பதரை வி.டி. லோக்கல். காலையில் பஜ்ஜியா சாய் ஆபீஸ் கணக்கு. மத்தியானம் மைசூர் கஃபே ரைஸ் பிளேட். இரவில் மணி ஐயர் மெஸ் வரிசை.

நமச்சிவாயம் ஃப்ளோரா ஃபவுன்டன் பக்கம் ஏற்றுமதி இறக்குமதி கம்பனியில் ஸ்டெனோ. பத்தரைமணி அலுவலகம். அவன்தான் காலையில் கடைசியாக இறங்குபவன்.

தாமோதரன் முகமூடி அணியாத மர்ம மனிதன். சற்று சீக்கிரமாக இறங்குவது நல்லது போலப்பட்டது செல்லையாவுக்கு. ஒரு பெண் அறையில் இருப்பது இயல்பைக் கலைத்துக்கொண்டிருந்தது.

இரண்டு நாட்கள் அரவமின்றி அவிழ்ந்து போய்விட்டன. வீட்டில் சில திருத்தங்கள் தெரிந்தன. ஒழுங்கும் ஒரு அழகைக் கொண்டுவந்து விடும் போல. இரவு ஒருவேளை எல்லோருக்கும் வீட்டுச் சாப்பாடு கிடைத்தது. அண்டை அயலில் இரவல் வாங்கிய ஸ்டவ், அலுமினியப் பாத்திரங்கள். காகிதக் கூடுகளில் வாங்கி வைத்திருந்த அரிசி, பருப்பு, உப்பு, புளி, சமையல் பொடி வகைகள்.

முதல்நாள் இரவு படுக்கப் போகும்போது சற்றுக் கூச்சமாக இருந்தது. செல்லையாவும் சதாசிவனும் வெளி வராந்தவில் படுத்துக் கொள்கிறோம் என்றனர். நல்ல குளிர்காலம் என்றாலும் இருவரிடமும் முரட்டு ஆட்டு ரோமக் கம்பளிகள் இருந்தன. சதாசிவத்தின் உறவுக்காரர் நேவிக் கான்டீனில் வாங்கித் தந்தது. தாமோதரன் பகல்வாசி. நமசின் மாமனார்தான் பிரச்னை. அவரை இந்தக் குளிரில் வெளியே வராந்தாவில் கிடத்த முடியாது. விறைத்துப் போனால் பிண அடக்கத்துக்கு இரண்டா யிரம் ரூபாய் ஆகிவிடும். கிச்சனில் ஓராள் படுத்துக் கொள்ளலாம். ஏன் இரண்டுபேர்கூட. அதை நமசின் மாமனாரிடம் யார் சொல்லக்கூடும்?

நமசையும் கற்பகத்தையும் விட்டுவிட்டு, எல்லோரும் இரவுக் காட்சி சினிமாவுக்கு, அரோரா தியேட்டருக்குப் போகலாம் என்றால், சினிமா பார்த்து முப்பத்தேழு ஆண்டுகள் ஆகிவிட்டன என்றும் இந்தி புரியாது என்றும் சொன்னார், குறிப்பறியாமல். நல்மரம்.

வெளிவராந்தாவில் நின்றுகொண்டு சதாசிவன் செல்லையாவிடம் கேட்டான்.

''என்ன ஓய் செய்யறது? புட்டா, ஸாலா, அனங்க மாட்டங்கான்!''

''வேணும்ணா ரெண்டு காம்போஸ் வாங்கீட்டு வாறேன். சாயாவிலே கலக்கிக் குடு.''

''வயசு காலம் ஓய்! வாயைப் பிளந்துட்டா என்ன செய்வீர்?''

''பேசாம நீயே சொல்லீரு, கிச்சன்லே படுக்கதுக்கு.''

''சொல்லீர வேண்டியதுதான். ஃபேன் இல்லே, கொசு கடிக்கும் என்பார்.''

''பின்னே என்ன செய்யச் சொல்லுகே? நமஸ் சாமர்த்தியக்காரன். எப்படியோ அட்ஜஸ்ட் செய்வான். விட்டுத் தள்ளும்.''

அடுத்த நாள் காலையில், நமஸ், செல்லையாவைப் பார்த்துக் கண்ணடித்தபோது சற்று நிம்மதியாக இருந்தது அவனுக்கு. கூடவே ஒரு அதிர்ச்சியையும் தூக்கிப்போட்டான்.

''ஓய், செல்லையா! ஒரு ஆயிரம் ரூபாய் அட்ஜஸ்ட் பண்ணும் சாயங்காலம்.''

சம்பளத்துக்கு இன்னும் நாட்கள் இருந்தன. ஓவர்டைம் வாரக் கடைசியில் கிடைக்கும் என்றாலும் அதற்கும் செலவுகள் இருந்தன.

நமஸ் பரிதாபமாகப் பார்த்தான்.

''பண்டுலே எடுத்துத் தரட்டா?''

''என்ன எழவாம் செய்யும். சாயங்காலம் பணத்தோட வாரும்.''

தொழிலாளர்களுக்கு இடையே ஒருவித நிதி வைப்பு நடந்து கொண்டிருந்தது. மாதாமாதம் பங்குத் தொகை கட்ட வேண்டும். தேவைக்கு வட்டிக்கு எடுத்துக் கொள்ளலாம். அஞ்சு வட்டி. காலையில் சொன்னால் மாலையில் பணம் கிடைக்கும். சிலசமயம் அதற்கும் அடிதடி.

இடையிடையே மாடசாமி என்று திரும்ப வருவாரோ என்ற அச்சம் கிளர்ந்து கிளர்ந்து அடங்கியது.

அறையில், இரண்டு நாட்களாக, சுதந்திரம் போய்விட்டது. துண்டைக் கட்டிக்கொண்டு முகம் வழிப்பதும் குளித்தபின் பொருட் டற்று உள்ளாடை அணிந்து திரிவதும் வேற்றுப்பெண் இருக்கையில் எப்படி சாத்தியம்?

நமஸ் முகத்தில் குதூகலத்தின் சாயலும் கலவரத்தின் சாயலும் நிறம் பின்னிக் கிடந்தன.

மாமனார் இரண்டொரு நாளில் வீடு கிடைக்குமா என்ற உள்வாங்க லிலும் கலந்தாலோசிப்பிலுமாய் இருந்தார். நமசுக்கு அதுபோல எந்த உத்தேசமும் இல்லை. கையில் காசு கிடைத்ததும் டிக்கட் வாங்கி விடுவான் போலும். சனி, ஞாயிறில் சுற்றுலா உத்தேசம் இருக்கும்.

எப்படியும் ஐந்தாறு நாட்கள் தானே, நம்மால் இடைஞ்சல் வேண்டாம் என்று தாமு இரவு ஷிப்டை பகலுக்கு மாற்றிக்கொண்டான்.

எல்லோருக்கும் சற்று பொறுப்பு வந்ததுபோல் இருந்தது. இரவு களில் நெடுநேரம் பேசிக்கொண்டும் பாடிக்கொண்டும் சீட்டு விளை யாடிக்கொண்டும் சீண்டிக்கொண்டும் கூத்தடிக்க முடியவில்லை. நமசுக்கு பேச்சலர் வாழ்க்கையின் அல்லல்கள் புரியும். எனவே காலை யில் எல்லோருக்கும் சாய் கிடைத்தது. இரவு ஒரு மொளகூட்டல் அல்லது எரிசேரியுடன் சூடான ரசம் கிடைத்தது.

முன்னிரவுகளில் முகம் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதைத் தவிர்க்க சாப்பாட்டுக்குப்பின் ஒரு உலாத்தல் இருந்தது. வராந்தாவில் மூடிப்பொதிந்து முடங்கிக் கிடந்தாலும் உள்ளே இருந்து நமசின் மாமனாரின் இருமல் அடிக்கடி கேட்டுக்கொண்டிருக்கும். ''என்ன சல்லியம்?'' என்று சதாசிவன் முனகினான்.

வராந்தாவில் வீட்டுச் சுவரோரம் படுக்கை விரித்து, கைப்பிடிச் சுவரோரம் ஆள் நடக்க வழிவிட்டு, நீண்ட வாக்கில் தாமுவும் செல்லை யாவும் சதாசிவனும் உறங்கிக் கிடந்தனர். கிட்டத்தட்ட மார்ச்சுவரியில் வரி வைத்துக் கிடத்தப்பட்டிருக்கும் பிணங்கள்போல.

சுந்தரக் கனவொன்றில் ஆழ்ந்து உறக்கத்துக்கும் விழிப்புக்குமான ஊடலில் செல்லையா கிடந்தபோது, மாடிப்படிகளில் தடதடத்த காலடி யோசைகள். பொழுது இன்னும் விடிந்திருக்க நியாயம் இல்லை. குளிருக்கு இதமாக உடல் போர்வைக்குள் உள்வாங்கிக் கொண்டது.

சற்று நேரத்தில், ''ம்ஹூம்... ம்ஹூம்'' என்ற தொண்டைச் செருமல் கேட்டது. தொடர்ந்து, ''கோன் ரே இதர் சோத்தா ஹை?'' என்ற வினாவும்.

மாடசாமி ஊரில் இருந்து திரும்பிவிட்டார் என்று செல்லையாவுக்கு தெரியத் தொடங்கியது. முதலில் ஏன் இந்த ரயில்களை விடியுமுன் கொண்டுவந்து சேர்க்கிறார்கள் என்று தோன்றியது. பின்பு நமசும் குடும்பமும் உள்ளே படுத்திருப்பது நினைவில் முளைத்தெழுந்தது.

இந்த மாடசாமிச் சனியன் ஒருவாரம் பிந்தி வந்திருக்கக்கூடாதா என்ற எரிச்சல் ஏற்பட்டது.

மாடசாமி, காலால், ''அட... உட்ரே... உட்'' என்று லேசாக எற்றிய போது செல்லையா எழுந்து உட்கார்ந்தான் மனமின்றி.

காட்சி மூடம் தெளிந்து புலப்பட்டபோது மாடசாமியின் பின்னால் அவர் மனைவியும் இரண்டு மகள்களும் நிற்பது தெரிந்தது.

தினமணிக்கதிர், மார்ச் - 1997